[6th February 1959

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கிராமாந்திரங்களில் ஹரிஜனங்களுக்கு சிறிய அளவில் தான் வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டு வருவதாக தெரிகிறது. அடுத்த ஆண்டிலாவது ஹரிஜனங்களுக்கு அதிகமாக வீடுகளை கட்டிக் கொடுக்க சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI A. GOVINDASAMY : ஸ்ார். மேலூர் அடுத்த உச்சரிச்சான்பட்டி கிராமத்திலுள்ள சேரியில் வீடு கட்டுவதற்கு கல் அடித்து வைத்திருந்ததை கண்ட்ராக்டர் வாரிக்கொண்டு போய்விட்டதாக சொல்லப்படுகிறது. அதைப் பற்றி அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

DEPUTY SPEAKER : How can the Hon. the Member expect a reply from the Hon. Minister to this question?

*Fish breeding in paddy fields*

* 80-*B Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether fish breeding is encouraged in paddy fields; and

(*b*) if so, what are the varieties that are bred in paddy fields?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) Curps, Murrels and Cat fishes can be bred in paddy fields.

SRI K. SATTANATHA KARAYALAR : ஸார், நாட்டு இனங்களாக இருக்கக்கூடிய ஜரை என்ற வகை மீன்களை சம்பா பயிரில் வளர்ப்பது நல்லது என்று சொல்லுகிறார்கள். ஆகவே அம்மாதிரியான இனங்களையும் வளர்ப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்போது வளர்க்கப்பட்டு வரும் முரால் என்கிற சிறால் மீனும், கேட் பிஷ் என்கிற கெண்டை மீன்களும் நாட்டு இனங்களை சேர்ந்தது தான்.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speec indicates revision by the Member.]

II.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

DEPUTY SPEAKER : Now the discussion on the Governor's Address will be continued.

SRI S. PAKKIRISAMI PILLAI : தலைவர் அவர்களே, நேற்றைய தினம் ஒரு அவசரமான——அவசியமான——விஷயத்தைப் பற்றி விவாதிக்க வேண்டிய காரணத்திற்காக இந்தச் சபையின் விவகாரத்தை ஒத்திவைக்கவேண்டுமென்று ஒரு தீர்மானம் கொடுத்திருந்தேன். அதாவது "கெரோஸின் ஆயில்" நம் நகரத்திலும், கிராமங்களிலும் அதிக விலைக்கு விற்கப்படுகின்றது. இதைத் தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிவதற்காக அந்தத் தீர்மானத்தைக் கொடுத்திருந்தேன். அதை இன்றைக்கு எடுத்துக் கொள்வதாகத் தெரியவில்லை. அது என் அனுமதிக்கப்படவில்லை என்று அறிய விரும்புகிறேன்.